# சசி வன்ன போதம்

1997

வெளியீடு :

மகாதேவ வேதாந்தச் சங்கம்
பதிவு அலுவலகம் : "லலித் மஹால்"
ரிஜிஸ்தரார் பெரியசாமி தெரு,
சங்கரன்பாளையம்,
வேலூர் - 632 001.

# மகாதேவ வேதாந்தச் சங்கம்

(பதிவு செய்யப்பட்ட அறக்கட்டளை)

**V. கிருஷ்ணன்**, B.Com., F.C.A.,
அறங்காவலர்.

**வேதாந்த தொடர் சொற்பொழிவு
மற்றும் கலந்துரையாடல்**

**நாள்** : ஒவ்வொரு ஆங்கில மாதமும் இரண்டாவது மற்றும் மூன்றாவது ஞாயிற்றுக்கிழமை

**நேரம்** : காலை 9-30 முதல் மதியம் 12-00 மணி வரை

**இடம்** : ''லலித் மஹால்,'' ரிஜிஸ்தரார் பெரியசாமி தெரு சங்கரன்பாளையம், வேலூர்-632 001 (லட்சுமி தியேட்டர் அருகில்)

**பொருள்** : '' வேதாந்தம் ''

**அருளுரை** : '' வேதக்கடல் ''

தவத்திரு மகா. நாராயண சுவாமிகள்

(7வது மடாதிபதி, தோப்பா சுவாமி மடம், சைதாப்பேட்டை, வேலூர் மற்றும் தலைவர், மகாதேவ வேதாந்த சங்கம்.)

அனைவரும் வருகை தந்து பயனடையுமாறு வேண்டுகிறோம்.

---

பெருவாழ்வு, பேரறிவு, பேரானந்தம் பெறவும், வையத்துள் வாழ்வாங்கு வாழவும், வேதாந்தம் பெரிதும் உதவுகிறது.





## முன்னுரை

ஸ்ரீ தத்துவராய சுவாமிகளும். ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளும் மைத்துனர்கள். இருவரும் கல்வி கேள்விகளில் புலமை வாய்ந்தவர்கள். ஆனால் தத்துவ ஞானம் இல்லாமல் துக்க நிவர்த்தி, ஆனந்த பிராப்த்தி கிடையாது என்று ஞான குருவை அடைய இருவரும் முயற்சித்தார்கள் நாம் இருவரும் தெற்கு வடக்காக செல்வோம். நம்மிருவருக்கும் குரு கிடைத்துவிட்டால் குருவையடைந்து அவர் உபதேசத்தால் ஞானம் பெற்று மோட்சமடைவோம். ஒருவருக்கு குரு கிடைத்து, மற்றவருக்கு குரு கிடைக்கவில்லையென்றால் குரு கிடைத்த அவரையே மற்றவர் குருவாக அடையலாம் என்று தீர்மானித்து இருவரும் இரு திசையில் சென்றார்கள். ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகளுக்கு தென்னாட்டிலேயே குரு கிடைத்து உபதேசம் பெற்று, ஞான வாழ்க்கை வாழ்ந்தார். வடதிசை சென்ற ஸ்ரீ தத்துவராய சுவாமிகளுக்கு குரு கிடைக்காமல் திரும்பி வந்தார். மைத்துனர் சிவப்பிரகாச சுவாமிகள் குரு உபதேசம் பெற்று ஞான வாழ்க்கை வாழ்வதை கேளவிப்பட்டு வந்து அவரையே குருவாக ஏற்று குரு பணி செய்து வந்தார். அதுசமயம் ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் இவரை சோதனை செய்யும் பொருட்டு அமாவாசை அன்று காலை எண்ணெய் தலைக்குத் தேய்த்து குளியல் செய்ய வேண்டுமென்று சொன்னார்கள். அப்பொழுது தத்துவராய சுவாமிகள் இன்று அமாவாசை ஆயிற்றே எண்ணெய் குளியல் செய்யலாகாதே என்றார். அதனால் காலாதீதனை எனக்கு காலத்தை கற்பித்து கட்டுப்பட்டவனென்று சொல்கிறாயா, என் முன் நில்லாதே, போய்விடு என்று கோபமாக குரு போய்விட்டார். உடனே தத்துவராய சுவாமிகள் குருவுக்கு மாறுபட்டு நடந்தோமே, இந்த பாவத்தை எங்கு போய் தொலைப்பது என்று துக்கப்பட்டு, பின்புறமாக தன் பிழையை பாடிக்கொண்டே போய் சமுத்திரத்தில் விழலாம் என்று போனார். உடனே குருமூர்த்தி சீடர்களை கூப்பிட்டு அவர் பாடுவதையெல்லாம் அவருடன் சென்று எழுதி வாருங்கள் என்று அனுப்பினார். தத்துவராய சுவாமிகள் பாடிக் கொண்டு போக மற்ற சீடர்கள் எழுதிக் கொண்டு போகிறார்கள். இப்படி இரண்டு மூன்று நாட்களாக அன்ன ஆகாரமில்லாமல் சரீரமெல்லாம் மெலிந்து கஷ்டப்படுவதை பார்த்த சீடர்கள் குருவிடம் ஓடிவந்து அன்ன ஆகாரமில்லாமல் சரீரம் மெலிந்து விட்டார் தத்துவராயர். இன்னும் தாமதித்தால் சமுத்திரத்தில் விழுந்து இறந்தே விடுவார். நீங்கள் அருள்கூர்ந்து அவரை காத்தருள வேண்டும் என வேண்டினர். உடனே குருவும், குருவுக்கு வீங்கினவனை வரச் சொல்லுங்கள் என்று பணித்தார். உடனே சீடர்கள் தத்துவராய சுவாமி

களிடம் சென்று குரு சுவாமிகள் உங்களை பிரியமுடன் அழைத்து வரப் பணித்தார். நீங்கள் உடன் வரவேண்டும் என வேண்டினர்கள். சுவாமிகளும் மகிழ்ச்சி பொங்க ஆனந்தமாக பாடிக்கொண்டே வந்து குருவை சரணடைந்தார். குருவும் அன்புடன் தமது அருகில் அமர வைத்தார். சீடர்கள் தத்துவராய சுவாமிகள் பாடிய பாடல்களை யெல்லாம் குரு சந்நிதானத்தில் சமர்ப்பித்தனர். பாடல்களை குரு படித்துப் பார்த்து, முடி உள்ளவன் வாரி முடிப்பான், இல்லாதவன் என்ன செய்வான் என்றார். இப்படி பேசிக் கொண்டிருந்தபோது குருவை உணவு அருந்த அழைத்தனர். குருவும் உணவருந்தச் சென்றார். தத்துவராய சுவாமிகள் தாம் பாடிய பாடல் குருவுக்கு திருப்தியாகவில்லையே, திருப்தியாகும்படி பாடவேண்டும் என்று குரு உணவருந்தி வருவதற்குள் இந்தச் "சசி வன்ன போதம்" என்ற நூலை பாடி முடித்து, குருவிடம் சமர்ப்பித்தார். நூலைப் படித்துப் பார்த்து பரமானந்தம் அடைந்து தத்துவராய சுவாமிகளை மகிழ்ச்சி பொங்க தழுவி அணைத்துக் கொண்டாராம்.

இந்த சசி வன்ன போதம் என்ற நூலை வேலூர் மகாதேவ வேதாந்த சங்கம் சார்பில் இரண்டாம் வெளியீடாக வெளியிட்டிருக்கிறார்கள். இந்நூலை எல்லோரும் வாங்கிப் படித்து பயனடையுமாறு வேண்டுகிறேம்.

மஹா நாராயண சுவாமிகள்




8-2

உ

சற்குருப்யோ நம :

## மோகவதைப் பரணியின் கண்ணுள்ள சசி வன்ன போதம்

கடவுள் வணக்கம்

மதிபருதி யெரிநீர்கால் வானவனி யியமானன் வடிவா யெல்லா
வதிபதியா யுனைத்துமா யல்லாத வறிவுருவை யகத்துள் வைப்பாம்.
சொல்லாற்றம் மதிவிரகாற் றூயதிது தீயதிது வென்னு மாக்க
ளெல்லார்க்கு மதுவதுவா யிறையிருக்கும் படியேயாயாம்
யிருக்கவென்றே.

நூல்

அலகை யச்ச மறவக வான்களு
முலகின் முத்திபெ றும்பரி சோதுவாம். 1

புணர்ந்த பாவமெ லாம்பரி பூரண
முணர்ந்த ஞாநி விழிபட வோடுமே. 2

எழிலாரு ஞாநி புகழென்னை கூற வுயர்வீ டிவன்சொல் வழிசெய்
தொழிலாளர் சேர்கை யதுகேளு முன்னை யிதிகாச மொன்று
சொலவே. 3

தந்தாப மற்ற பரனேவல் செய்த வவனுற்ற பேறு தனைமுன்,
செந்தாம ரைக்கண் முதல்வற்கெ மண்ண றிருவாய் மலர்ந்ததிதுவே. 4

உவமிப்பின் ஞாநி விழிபட்டு முன்னை வினைவிட்டு முத்தி யுலகிற்,
றவமற்ற வெய்ய வினையே புரிந்த சசிவன்ன னெய்து கதையே. 5

ஏமம் புகுவா ருளபா தகரா மியாவர்க் குளுமிக் கவனு குமிவ,
ஞமம் புகல்வார் குலமும் மெரிவாய் நரகம் புகுமா றுநடந் தனனே. 6

மலமே வியதீ வினையின் வலியான் மகிழும்பர் பதத்தி லிருந்த
விவன் குலமே வியதென் புலவா ணர்களுங் கொடிதா நரகங்
குடியே றினரே. 7

மிகமே வியபுண் ணியபா வமெனும்வினையின் பயன்மே லொருகா
லமுறு. திகமே வருமென் பதனு லுளநோ யெல்லா மிவனைச் செற
வெய்தினவே. 8

தன்புத் திரனே யம்விடா மையினாற் றவறுற் றவிவற் பெறுதந் தையுளந், துன்புற் றினியென்னைகொலோ புதல்வன் றுயர்தீர் வகையென் றுசுழன் றனனே. 9

ஒன்று லும்வினைத் துயர் துய்ப் பதலா லொழிவிக் குமுபா யமுனக் கிலதே, யென்று லுமறிந் தவனன் புவிடா திவனைக் கொடுழன் றனனெங் கணுமே. 10

ஒருமா தவன்மற்றிவன்வே தனைகண் டொழிவற் றுளவொன் றையுளந் துணரும் பரமா கியஞா நிகள்கண் ணுறலே பரமா விழ்தமென் றுபகர்ந்தனனே. 11

தானந் தமிலா ததனைத் தருவான் சத்தீச் சுரமென் னுமிடந் தனில்வாழ், மாநந் திபரா யணரென் பவர்நின் மைந்தற் குறுநோய்க் குமருந் தெனவே. 12

முடியா வுபதே சமிதென் றவனு முநிவன் பதமெய் திமொழிந் தனனிக், கொடியான் வெருவா துகுயிற் றியநோய் கூறற் கரிதா யகொடுந் தொழிலே. 13

ஈங்குன் றிருமுன் பகரும் படியோ விவனெய் தியதீ வினையென் னவெலா, நீங்கும் படிதன் னநுபூ தியினு னிகழும் விழிவைத் தனனின் மலனே. 14

கணியா தபவக் கடுவா னதிருக் கண்வைத் தலும்விட் டனகா துகடும், பிணியா வையுநல் லபிதா விறைதாள் பேணிப் பணி யென் றுபெயர்ந் தனனே. 15

இடனே முதலா கவுவந் திறையோ னேவும் பணிசெய் திவனுஞ் சிலநா, ளுடனே யிவனே திருமே னிதனக் குரியா னெனவுற் றனனும் பனொடே. 16

நன்றாய் முநிதாள் வழிபா டதனு னுநா விதமா னபிறப் பினைவிட், டொன்று கியவீ டுணருத் தமர்கட் குளசா தந நாலுமுதித் தனவே. 17

முனிவன் றிருமுன் புளதன் குறைதான் மொழிவன் சிலவஞ் சலி குஞ் சியதாய்ப், பனிவந் திருகண் கள்பதங் களிலே பலகால் வலம்வந் துபணிந் தனனே. 18

அருளே வடிவா கியமா முநிதா னறியா தவர்போ லவமுங் கலுறும், பொருளே தெனமைந் தனடுங் கினனிப் பொல்லா தபவப் புணரிக் கெனவே, 19



வெருவும் பிறவிக் கடல்வித் தரமுன் வேதா கமகீ தைவிளம் புமதைக், குருவுந் தனதன் பன்மநத் தளவிற் கொளுமா றுதொகுத் திவைகூ றிடுமே 20

மரணபவங்க ளானபுனலை யுடையது மதியைவிழுங்கு காமவரவு பெரியது, கரண வொழுங்க ருதுவிடய விரைநுகர் கணமொ டியங்கு மீநமிகவு முகள்வதே. 21

பெருமிதமென்று கூறுபெருமையுடையது பிணிகளெனுங் கெடாத புலவு கமழ்வது, வருமிடரின்ப மானதிரைகள் பொருவது மந மெனும் வஞ்ச ராஜ மகர முறைவதே. 22

அளவிலகந்தை யாமையபரி மிதமுள தவாவுநிறைந்த வாழமறிய வரியது, களவு நெருங்கு பாருமலையு முடையது கலகவிடங்கண் மேவுகிருமி நெளிவதே. 23

துகளெனுநன்க லாதநுரைக டருவது துறவெனுமில்ப மான கரையை விடவகன், மகளிரெனுந்த வாதவலிய சுழியது மறலியு மஞ்சு கோபவடவை யெரிவதே. 24

வெருவருகின்ற போகமுதலை யுடையது விவிதமநந்த மானதுறையு மறிபவ, ரொருவர்கடந்து போகவிரகி லெழுபவ வுததிவிளம்ப யாவருலகி லறிஞரே. 25

பொறிவழிசென்று மீளுமவல மதிகொடு பொருசமயங்க ளாறு மறிய விழுமதி, லறிவழிவொன்றி லாதபொரு ளதெனவுள வநு பவவங்க மேறுமறிஞ ரகல்வரே. 26

புணரிகடந்து போகவிரகி லெனமொழி பொழுதுபுலம்பி யாவி புதல்வ னிறுமுன, முணர்வெனும்வங்க மேருமறிஞ ரகல்வரென் றுரையைவழங்கி நாதனுவகை யருளவே. 27

வாழியென விறைவனடி தொழு துவருபவமா, மாழியினை யகலுமறி வருளுகென வவரே. 28

பரவறிவு மபரவறி வெனவுமிரு பரிசாத், திரவறிவை யறியுமவர் மொழிவர்தெளி வுறவே. 29

அபரவுணர் வருமறைகண் முதல கிலகலையு, முபரமம தறவுதவு முணர்வுபர வுணர்வே. 30

ஆகமவி தங்களறி வாரபர மறிவார், யோகமொடு றங்குமவ ரேபரமுணர்ந் தோர். 31

புராணமிதி காசமெவை யும்பொருள ஊனத்தின், பிராணனறி
யாதுளவி டத்தி வைபி தற்றே. 32

இயலறிவ திசையறிவ தினமறிவ துளவா, மயலறிவ தறிவதல
வறிவறிவ தறிவே. 33

நவிலுகலை யறுபத்து நாலுமறி வாரும், பவலயம
தறுசுத்த பரமமறி யாரே. 34

ஆகவறி வாளரறி வாரிவை யனைத்து, மேகவறி
வாளரிவை யாவுமறி யாரே. 35

ஐயறி வறிந்தவை யடங்கினவ ரேனு, மெய்யறிவி
லாதவர்கள் வீடதுபெ ருரே. 36

மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவ தெல்லாந், தம்மையறி
யும்மறிவ தேயறிவு தானே. 37

பூசனையு மதுசகல பொருளுமறி தமையு, மீசனையும்
வேறதற வறிவதறி வெனவே. 38

தானெனு முடம்பது தனைத்தவிர வேரு, யானெனு
மருத்தமுள வோவருளு கெனவே. 39

எனதாடை பொன்பூம கன்றையல் பாய்மா விபங்கண்முகங்
கால்கை மெய்யென்ன வென்றுந், தனதாயு ரைப்பான்வ குத்திந்த
வூனைத் தானென்ற யர்த்துஞ்சொ லத்தக்க தன்றே 40

தாளாக வூராழி யார்வெந்நில் வீணு தண்டாக வன்மார்பு தட்டாக
மொட்டா, நாளாம லர்ச்சென்னி கூந்தற்கொ டித்தேர் நாணுளு
மூர்வானில் வேருக நாடே. 41

கடக்குஞ்ச ரம்பண்ணி, யுண்ணின் ஞெருத்தன் கைபாத கண்ணங்
கண் மெய்போலி யக்குங், கிடக்கும் நடத்தா விடத்திவ்: வுடம்புங்
கிடக்கும்மொருத்தன் நடத்தாவிடத்தே. 42

ஒருகூறு மலமாகு மொருகூ றுடம்பாகு மொருகூறு மநமாகு
முண்டற்ற வந்த, மிருகூறு நீயாகி லொருகூறு நீயா மிழிக்கும்ம
லஞ்சோரி டப்பட்ட வுடலே. 43

கிளராத ரத்துண்ணு மந்நஞ்சு டக்கை கிட்டப்போ ருதேயி
ருந்தார் முனிந்தார், தளராது றுப்பொன்று முயிர்போக வன்றே
தழற்புள்ளி மீதேது யின்ருர்ச கித்தே. 44



நிழற்பாவை கண்ணுடி யிற்பாவை கைகா னிமிர்க்கும்மு டக்கும்மி
வன்செய்யு மெல்லாந், தொழிற்பால வாமற்றிவ் வுடலஞ்செய்
தொழிலுஞ் சுடர்ஞான வடிவான வன்செய்த தொழிலே. 45

அறிகின்ற பொருளென்று மறிவானில் வேறே யானுலிவ் வூனுக
நானென்னலாமோ, செறிகின்ற புள்ளல்ல வேகூடிவ் வகையே
செடமான வுடனின்னில் வேறென்று தெளியே. 46

நிலமாகும் வற்பென்ற னெகிழ்கின்ற நீரா நெருப்பாமி திற்சுட்ட
வெல்லாமு மனிலஞ், சடமான புரையான வானிந்த வுடலஞ்
சடமான வைம்பூத வுருவங்க டாமே. 47

விழியைப்பு மானென்னில் ரவியாதியாலே விளங்கின்ற நல்லால்வி
ளங்காமையாலே, யொழியப்ப டுங்கன்ன முதனுலு முன்ற
னுருக்கண்ட கண்டன்னை யொப்பாக வுன்னே. 48

அழலுண்பொருள் களினுண்பவை முக்கூறதின் முதற்கூறணியென்பு
நடுக்கூறது மச்சைக்கணியாகு, மெழில்கொண்ட கடைக்கூறது வாக்
காயெழுமென்றே யியனுன்மறையந்தங்க ளிசைக்கின்றன வாமே 49

உண்ணும்புனன் முக்கூறதின் முதற்கூறுவர் நீரா முதிரந்நடு விற்
கூறுக டைக்கூறுபி ராண, னெண்ணுப்மிதி லிருகூறவை நீயாயிடி
னன்றுே விறுகின்றபி ராணன்னது நீயாகுவை யிசையே. 50

பிராணனு மல்ல துஞ்சி லுணர் வின்மை யாலஃ துணரும்பு
லன்க ளொழிவாற், பிராணன தென்னின் மன்னை யொழியாது
சேனை நகர்சூழ்வ லஞ்செய் பொழுதே. 51

கரணமொ டுங்க வாயு நிகழ்வென் கொலென்னி னுடல்காவ
லாகு மலதேன், மரணமடைந்த தென்று தமர் சுட்டி டாமுன்
வளைவாலின் ஞாளி கோலுமே. 52

இனமுற வெண்ண வுள்ள கரணத் திலொன்றி தெனலாலி
தென்ன தெனலான், மநமுன மந்த மென்ற வதனுலு மல்ல
மதியல்ல வந்த வகையே. 53

இடரின் புளதாய் நிலையற் றறிவற் றெண்ணுங் கரணங் களிலா
யெவரு, மடரும்பிறவிக் கடியென் றுணரு மகங்கா ரமுநீ யல
வென் றறியே. 54

ஐயப் படலோர் பொருணிச் சயமா யறியப் படல்யா னெனதென்
றுமதஞ், செய்யப் படல்செய் வதுசிந் தனையாஞ் சித்தம் மதுவன்
றெனநீ தெளியே. 55

முன்னு கவுடம் பதுசித் தமதே முடிவா கமொழிந் தபொருட்
டிரடா, னின்னு கிலநீ யறியும் பொருளாய் நிகழ்கின் றதனு
லெனநின் மலனே. 56

உன்னு லறியப் படும்யா வையுமுன் னுருவன் றெனவோ தினை
யொக் குமெனக், கென்னு லறியா தொழியும் பொருளோ யானு
குவதென் றனனென் றலுமே. 57

அறியாப் பொருள்கா ரணமா யைகுறித் தறியும் பொருள்கா
ரியமா முலகிந், நெறியாற் றிகழ்நான் மறையந் தமெலா நீயன்
றெனவோ துநிரந் தரமே. 58

அறியும் பொருளன் றறியாப் பொருளன் றறிவா கியநீ யெனுமப்
பொருடான், பொறியின் வழிநின் றறியும் பொருளோ போதக்
கண்விழித் தறியும் பொருளே. 59

வேதப் பொருடா னிதுவே றுசொலும் வினையா வையுமன்
றுருவே றுமிலாப், போதப் பொருளந் தமறைக் கணியாம்
புனிதப் பொருடத் வமசிப் பொருளே 60

நிமல மாம்பர மதுவெ னும்பொரு ணீயெ னும்பொருள் சீவனே,
யமல மானவி ரண்ட யிக்கிய மசிப தப்பொரு ளாவதே. 61

அருமை யாகிய பிரம முன்னிலை யாகு மாருயிர் பின்னிலை,
யிருமை யானவி ரண்ட யிக்கிய மெய்து மாறெவ னென்னவே. 62

உபாதி யால்வரு பேத மேயிவர் பேதமன்றுரு வுயிரினின்,
கபாதி யாமுடல் போலி றைக்குள கார ணுதிகள் காயமே. 63

ஈசன் முற்றறி வான்வி யாபி யெவைக்கு மேது வியம்புமா,
காச கன்னிரு பாதி பாவனை கார ணுதிக ளாவதே. 64

நீதி யாலிரு பாதி நீக்கிட நீயெ னச்சொல்ப தத்தினு,
மாதி யாகிய தற்ப தத்து மசுத்த சுத்தமு ரைத்ததுமே. 65

ஆக முன்றிக ழேழு நானென றும்ப தத்தில சுத்தமே,
சோக மின்றிய சான்று நானென றும்ப தப்பொருள் சுத்தமே. 66

அகில காரண மாதிநானென றற்ப தத்தில சுத்தமே,
சகல காரண சான்று நானென றற்ப தப்பொருள் சுத்தமே. 67

செறிந்த காரண காரி யங்கள் சிதைந்து மேலுறு சித்ததா,
யறிந்த வாதனை தானு மற்றதவ் வசிப தப்பொரு ளாவதே. 68

அசுத்த மாகிய திருப தத்தினு முக்கி யப்பொரு ளாகுமே,
விசுத்த மானதி லக்கி யப்பொரு ளென்று சொல்லுவர் விமலரே. 69



முரண்ட சீவப ரங்க டம்முடன் முக்கி யப்பொரு ளாவதே,
யிரண்டில் வேறறு சிற்சொ ரூப மிலக்கி யப்பொரு ளாவதே. 70

ஊக்கி யப்பர சீவர் தங்க ளுடம்பி ரண்டுமி லக்கணு,
வாக்கி யப்படி நீக்கி னுலொரு வத்து வேபர வத்துவே. 71

ஓரில் விட்டதும் விட்டி டாதது முபய மும்மென வுணர்வுளோர்,
தேரி லக்கணை திரிவி தத்தி லிசைப்பர் மற்றதி யம்புவாம் 72

மஞ்சு கூப்பிடு தென்றல் போலவும் வடப கீரதி யுள்ளதே,
விஞ்சு கோஷம தென்றல் போலவும் விட்ட லக்கணை யாவதே. 73

சிவலை நின்றது வெள்ளை போயின தென்று செப்புதல் போலவே,
கவலை யின்றிவி டாத லக்கணை யென்று நீகொள்க ருத்திலே. 74

மேவும் விட்டு விடாத லக்கணை மெய்ம்மை யாதெனி னந்தவித்,
தேவ தத்த னெனும்பொ ருட்படி சிந்தை செய்திடு தீரவே. 75

விட்ட லக்கணை தனையும் விட்டு விடாத லக்கணை தனையுநீ விட்டு,
விட்டு விடாத லக்கணை யால்வி ளங்குவி ளங்கவே. 76

போது மேவிய தேசம் விட்டொரு புருட னைக்கொளு மாறுபோ,
லோது மீருடல் கண்டு விட்டத னுண்மை காணவு ணர்ந்திடே. 77

பிரியா வுயிர்கா ரியமா முடலும் பிரமத் துறுகா ரணமா முடலுங்,
கரியா கியவா தனையுங் கழியக் காட்டும் படிகண் டுகொள்
கண் ணுறவே. 78

கரணத் திரணிற் பினுமப் பொருளைக் காணக் கிடையா தவை
கையறவே, மரணப் படினும் மதுகண் டுகொளும் வழியில்
லையெனும் படிநீ மதியே. 79

எந்தக் கரணங் களுமே வனனு விதில்வா தனையால் விடயங்
களொடே, யந்தக் கரணங் கள்பொருந் தல்கனு வவைமாய்
தல்சுழுத் தியவத் தையதே. 80

வினவிற்ப ரத்தையறி வுறுதற்க வத்தைபுலன் வினைமாறியே,
நனவிற் சுழுத்திநிலை வரினபபொ ருட்டிகழு நலமாகவே. 81

திவிதத்த வத்தைகளை யறிவுற்ற வத்துரிய நிலைசீவனே,
யிவிதத்தி லப்புருட னனவுற்ற வத்துரிய நிலையீசனே. 82

அகிலக்க ரிப்பரம துரியப்பொ ருட்டுரிய மதுவாகையே,
புகலுற்ற தத்துவமசி யெனுமுப்ப தத்தின்முடி பொருளாவதே. 83

நிமலப்பொ ருட்சுருதி நெறியிற்பெ றற்கருணை நிதிகூறவே,
யமலப்பொ ருட்பெருத லருமைத்தெ னககழறி யடிவீழவே. 84

தமரக்க லைக்களவு தெரிவற்ற தடபொருள தனையீகுவா,
னமரர்க்க ளப்பரிய பதநற்பு னற்கொடுசெய் தபிடே கமே. 85

பவளத்தில் வைத்தவமிர் தினின் மிச்சி லி_டினிய பரிவோடுமா
தவளபபொ டிக்கவச மெனவிட்டு டற்பகைக டலைசாயவே. 86

உதகத்து டற்பொருளொ டுயிர் கைகொ டுச்சிமிசை யொரு
போதொடே பதகத்த லத்தைவிட விருகைத்த லத்தொடிரு
பதமேவியே. 8

ஒழியப்பு லச்கணுப நிடதப்பொ ருட்டெரிய வுளஞானமாம்,
விழியைக்கொ டுத்துமொழி யெனமுப்ப தப்பொ ருளும்
வெளியாகவே. 88

நனவைத்து வச்கிமுடி துரியத்தை முற்றவிறை நவினீதியே,
மநவர்க்க மற்றவநு பவமுற்ற சிற்ககந வலியோதுமே. 89

புரண மாகவே புரம்புள புலன் களுமந்தச், கரண மியாவையும்
வழங்கிடும் நனவெனக் கண்டேன். 90

புரண மாகிய புறம்புள புலன்கெட வந்தக், கரண மியாவையும்
வழங்கிடங் கநவெனக் கண்டேன். 91

மரண மாகிய திசையிது வெனுப்படி மநாதி, கரண மியாவையு
மிறந்துள சுழுததியுங கண்டேன். 92

எஞ்ச லின்றியெக் கரணமு மிறந்திருண் டிருந்த,
துஞ்ச லங்குணர் போதமாந் துரியமுங் கண்டேன். 93

துரிய மாகிய போதமோர் துளக்க மற் றனைத்தின்,
கரிய தாயிருந் திடம்பர னனவெனக் கண்டேன். 94

புணர்ந்த விச்சகத் தொழித்துணர் போதமாந் தனையே,
யுணர்ந்த மற்றது பரன்கந வெனுபபடி யுணர்ந்தேன். 95

சான்று சாக்கிய மிறந்திடத் தானிருந் தமையுந், தோன்று
ருவிடம் பரன் சுழுத்தியதெனத் துணிந்தேன். 96

மரித்த தென்றுணர்ந் துரைத்ததும் மரித்திடந் தனிலே, தெரித்த
போதமே ததுபரன் றுரியமாய்த் தெளிந்தேன். 97

இறையெ னும்பொருட் டுரியமே யென்னையாண் டவனே,
மறையி னந்தநற் பதப்பொரு ணனவென மதித்தேன். 98



பண்டை விச்சுவ வாதனைப் பழுதுபோய் முழுதுங்,
கண்ட கண்ணதே யாகிய கநவதுங கண்டேன். 99

காட்சி யாவையுங் கண்ணதா யக்கணுங் கரைந்த, மாட்சி
யாகிய வகோசர முறக்கமாய் மதிததேன். 100

அருந்த வாமறை யந்தமா மகோச ரந்தனினீ,
யிருந்த வாறறி வித்தவா ரெஙஙன மிசைபபேன். 101

எம்பி ரானிடந் தொறுமிடந் தொறுமது வதுவாய்த்,
தமபிரானடஞ் செயுமவகை சாற்றுமா றறியேன். 102

ஆவி யேயடி யேன்செய்கைம் மாறுனக் கென்னெனிற்,
பாவியேனது தானுமுன் னுடையதாம் பண்டே. 103

ஆவல் செய்தென தாக்கையுள் ளளவுநின் னடியார்ச்,
சேவல் செய்வதே யன்றிமற் றென்றிநா னறியேன். 104

இறவி லெப்பத மும்பெற வேண்டி லேனென்றும், பிறவி
வேண்டுவனின் றிருப்பணிசெயப் பெறினே. 105

என்றுபல கால்விழு மெழுந்தெழு மழும்புரியு மென்னையினியா,
னின்று பல வாகவுரை செய்தவவ னன்பினெடு நெஞ்சுருகியே. 106

ஏட்டிலறி வின்றியிறை தன்னிலறி வின்றியிவ் வுடபினுடனே,
வீட்டிலுறை வானையினி வீடுபெறு மென்பது விளம்புகிலமே. 107

வஞ்சவலி யானரகில் வீழ்பிதிர ரந்நரகு பாழ்படமிகா, விஞ்சை
வலி யாலடைய வேறினர்சு ராதிபர்கண் மேலுலகமே. 108

தேவரும னித்தருமி வன்றெழில் வியந்துரைசெ யப்படுவதோ,
மூவரும் வணங்கிமுடி யாலவன தேவல்செய முந்துறுவரே. 109

ஞாநியைந ரன்சுரனெ னுதொழிக ஞாலமுய நாதனருளான்,
மேனியது கொண்டுதனை நல்கவரு மென்றறையும் வேதமுடிவே. 110

சசி வன்ன போதம் முற்றிற்று

## சுவாமி விவேகானந்தர் தாயகம் திரும்பிய நூற்றாண்டு நினைவாக அவரது உரை

எல்லையற்றது என்ற கருத்தை நீலவானின் அல்லது கடலின் தோற்றத்துடன் தொடர்பு படுத்தியே பார்க்க வேண்டியுள்ளது. மன அமைப்பு விதி அவ்வாறுதான் செயல்படுகிறது. அவ்வாறே புனிதம் என்றால் சர்ச், பள்ளிவாசல் அல்லது சிலுவை போன்ற உருவங்களுடன் இணைத்து பார்ப்பதுதான் இயல்பானது. இந்துக்களும் தூய்மை, உண்மை, எங்கும் நிறைந்த நிலை ஆகியவை பற்றிய கருத்துக்களை பல்வேறு உருவங்களுடனும், தோற்றங்களுடனும் தொடர்பு படுத்தி உள்ளனர். ஆனால் ஒரு வித்தியாசம் சிலர் சர்ச்சின் உருவ வழிபாட்டுடன் தங்கள் வாழ்க்கை முழுவதையும் இணைத்துக் கொண்டு, அதற்குமேல் வளராமல் நின்றுவிடுகிறார்கள். அவர்களைப் பொறுத்தவரை, மதம் என்றால் சில கோட்பாடுகளை ஒப்புக்கொள்வது, பிறருக்கு உதவி செய்வது என்பவை மட்டும்தான். இந்துவின் சமயமோ தெய்வத்தை நேரடியாக உணர்வது தெய்வத்தை உணர்ந்து, மனிதன் தெய்வமாக வேண்டும். திருவுருவங்கள், கோவில்கள், சர்ச்சுகள், நூல்கள் இவை எல்லாம் ஆன்மீக வாழ்க்கையின் குழந்தைப் பருவத்தில் இருக்கும் மனிதனுக்கு உதவிகள், ஆதாரங்கள். ஆனால் அவன் இன்னும் மேலேமேலே முன்னேற வேண்டும்.

அவன் எங்குமே நின்றுவிடக் கூடாது. 'புற வழிபாடும், சடப் பொருள் வழிபாடும் கீழ்நிலை ஆகும். மேல்நிலைக்கு வர முயன்று, மனத்தால் பிரார்த்தனை செய்தல், அடுத்த உயர்நிலை. ஆண்டவனை உணர்வதுதான் அனைத்திலும் மேலான நிலை' என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. அதே உறுதிப்பாடு கொண்டவர், விக்கிரகத்தின் முன்னால் முழந்தாளிட்டுக் கொண்டு கூறுவதைக் கேளுங்கள் : 'அவனை சூரியனும் விவரிக்க முடியாது, சந்திரனும் விளக்க முடியாது, விண்மீன்களாலும் மின்னலாலும் உணர்ந்துரைக்க முடியாது, தீயும் அவனைத் தேர்ந்துரைக்காது, அவை அனைத்தும் அவனால்தான் ஒளிர்கின்றன'.

இந்து யாருடைய விக்கிரகத்தையும் இழிவுபடுத்தி பேசுவதில்லை; எந்த வழிபாட்டையும் பாவம் என்று கூறுவதில்லை. அது வாழ்க்கையின் இன்றியமையாத படி என்று அவன் ஏற்றுக் கொள்கிறான். 'குழந்தை, மனிதனின் தந்தை' குழந்தைப் பருவம் பாவமானது, அல்லது வாலிபப் பருவம் பாவமானது என்று வயதானவர் சொல்வது சரியாகுமா?



ஒரு விக்கிரகத்தின் மூலமாகத் தனது தெய்வீக இயல்பை ஒருவர் உணர முடியும் என்றால், அதைப் பாவம் என்று கூறுவது சரியா? இல்லை, அந்த நிலையைக் கடந்த பிறகு அவரே அதைப் பிழை என்று கூறலாமா? இந்துவின் கொள்கைப்படி, மனிதன் பிழையிலிருந்து உண்மைக்குச் செல்லவில்லை, உண்மையில் இருந்து உண்மைக்கு, அதாவது கீழ்நிலை உண்மையிலிருந்து மேல்நிலை உண்மைக்குப் பயணம் செய்கிறான். அவனைப் பொறுத்தவரை, மிகவும் தாழ்ந்த ஆவி வழிபாட்டிலிருந்து அத்வைதம் வரை எல்லாமே பரம்பொருளை உணர்வதற்காக ஆன்மா செய்யும் முயற்சிகள் ஒவ்வொன்றும் அது தோன்றிய இடத்தையும் சூழலையும் பொறுத்தது, ஒவ்வொன்றும் முன்னேற்றத்தின் ஒரு படியைக் குறிக்கிறது. ஒவ்வோர் ஆன்மாவும் மேலேமேலே பறந்து செல்லும் ஓர் இளம்பருந்தைப் போன்றது. அது உயரச் செல்லச்செல்ல மேன்மேலும் வலுவைப் பெற்று, கடைசியில் ஒளிமிக்க சூரியனை அடைகிறது.

வேற்றுமையில் ஒற்றுமைதான் இயற்கையின் நியதி. அதை இந்து உணர்ந்துள்ளான். பிற மதங்கள் எல்லாம் சில கோட்பாடுகளை நிர்ணயித்து அவற்றை சமுதாயம் ஏற்றுக் கொள்ளுமாறு கட்டாயப் படுத்துகின்றன; ஒரே ஒரு சட்டையை வைத்துக் கொண்டு, சமுதாயத்திலுள்ள ஜாக், ஜன், ஹென்றி எல்லாருக்கும் அந்த ஒரு சட்டை பொருந்த வேண்டும் என்று கூறுகின்றன. ஜானுக்கோ, சட்டை பொருந்தாவிட்டால் அவர்கள் உடலில் அணியச் சட்டையின்றி தான் இருக்க வேண்டும்.

சார்புப் பொருள்கள் மூலமே எல்லையற்ற இறைவனை உணரவோ, நினைக்கவோ, பேசவோ முடியும்; திருவுருவங்களும் சிலுவைகளும் பிறைகளும் வெறும் சின்னங்களே, ஆன்மீகக் கருத்துக்களை மாட்டி வைப்பதற்குப் பயன்படும் முனைகளே என்பதை இந்துக்கள் கண்டுபிடித்துள்ளனர். இந்த உதவி எல்லோருக்கும் தேவை என்பது அல்ல; ஆனால் தேவைப்படாதவர்கள், அது தவறு என்று கூற உரிமையில்லை. இந்து சமயத்தில் அது கட்டாயமும் அன்று.

ஒன்று நான் சொல்ல வேண்டும். இந்தியாவில் உருவ வழிபாடு என்பது பயங்கரமான ஒன்றல்ல; விலைமகளிரை உருவாக்கும் இடமும் அல்ல. உயர்ந்த ஆன்மீக உண்மைகளைப் புரிந்துகொள்வதற்கு, பக்குவப்படாதவர்களின் முயற்சிதான் உருவ வழிபாடு. இந்துக்களிடம் தவறுகள் உண்டு. சில வேளைகளில் விதி விலக்குகளும் உண்டு. ஆனால் ஒன்றைக் கவனியுங்கள்; அவர்கள் தங்கள் உடலை வருத்திக் கொள்வார்களே தவிர, அடுத்தவனின் கழுத்தை அறுக்க மாட்டார்கள். இந்து மத வெறியன் தன்னைத் தீயில் கொளுத்

திக் கொள்வானேயன்றி பிறரையல்ல. சூனியக்காரிகள் கொளுத்தப் பட்டதற்கு எப்படிக் கிறிஸ்தவ மதம் பொறுப்பில்லையோ, அதே போன்று இதற்கு இந்து மதம் பொறுப்பல்ல.

இந்துவிற்கு, உலகின் எல்லா மதங்களும், பலவித நிலைகளிலும் சந்தர்ப்பங்களிலும் உள்ள பல்வேறு ஆண்களும் பெண்களும் ஒரே இலக்கை நோக்கிச் செய்கின்ற பயணம் தான். சாதாரண உலகியல் மனிதனிடம் கடவுளை வெளிப்படச் செய்வதுதான் எல்லா மதங்களின் நோக்கமுமாகும். அவர்கள் அனைவருக்கும் எழுச்சியை ஊட்டுபவர் ஒரே கடவுள்தான். அப்படியானால் இத்தனை மாறுபாடுகள் இருக்கக் காரணம் என்ன? மாறுபாடுகள் எல்லாம் வெளித் தோற்றமே என் கிறான் இந்து. வெவ்வேறு சூழ்நிலைகளுக்கும் பல்வேறு இயல்புகளுக் கும் ஏற்ப தன்னை மாற்றி அமைத்துக் கொள்ளும் ஒரே உண்மையில் இருந்துதான் இந்த மாறுபாடுகள் எழுகின்றன.

ஒரே ஒளிதான் பல்வேறு வண்ணக் கண்ணாடிகளின் மூலம் பல நிறங்களில் வருகிறது. நம்மைப் பற்றி மாற்றி அமைத்துக் கொள்ள இந்த வேறுபாடுகள் அவசியம். ஆனால், எல்லாவற்றின் மையத்தி லும் அதே உண்மைதான் ஆட்சி புரிகிறது. கிருஷ்ணாவதாரத்தின் போது இந்துக்களுக்கு பகவான், 'முத்து மாலையிலுள்ள முத்துக்களைக் கோக்கின்ற நூல் போல நான் எல்லா மதங்களிலும் இருக்கிறேன். மக்களினத்தை உயர்த்திப் புனிதப்படுத்தும் அசாதாரணமான தூய் மையும் அசாதாரணமான ஆற்றலும் எங்கெல்லாம் காணப்படுகின் றனவோ அங்கெல்லாம் நான் இருக்கிறேன் என்று அறி' என்று சொன்னார். அதன் பலன் என்ன? இந்துக்கள் மட்டுமே காப்பாற் றப்படுவார்கள், மற்றவர்கள் காப்பாற்றப்பட மாட்டார்கள் என்று சமஸ்கிருத தத்துவ இலக்கியத்தில் எங்காவது கூறப்பட்டிருக்கிறதா? என்று கண்டுபிடிக்கும்படி நான் உலகத்திற்கு சவால் விடுகிறேன். 'நமது ஜாதிக்கும் கோட்பாடுகளுக்கும் அப்பால் கூட நிறை நிலை பெற்றவர்களைக் காண்கிறோம்' என்கிறார் வியாசர்.

தொகுப்பு: A. V. சண்முகம்.

